என்ன, ஒன்றும் புரியவில்லையா? எல்லாம் ஒரே குழப்பமாயிருக்கிறதா?—ஆஹா! அதுவே வேதாந்த நிலை, அதுவே வேதாந்த நிலை, அதுவே வேதாந்த நிலை!

இத்தகைய பரவச நிலையை நாம் அடைவதற்கு விரோதமாயிருப்பவர்கள் யார், தெரியுமா?—படிக்காத புத்திசாலிகள்'தான். 'அட, சரித்தான் போய்யா—எவளாயிருந்தாலும் அவளைக் கை பிடிச்ச தோசத் துக்குக் கஞ்சி வார்க்க வேணும்? இருக்கிறவரையிலே 'நீ என் பெண்டாட்டி, கண்ணுட்டி'ங்கிறது; போறப்போ 'நீ யாரு, நான் யாரு?''ன்னு கேட்டுப் புள்ளை குட்டிகளை யெல்லாம் நடுத்தெருவிலே விட்டுட்றதா?—நல்லாயிருக்கே, உன் ஞாயம்—? போய்யா, போ!' என்று அவர்கள் நம்மை விரட்டி விடுகிறார்கள்.

இவர்களுடைய மூளையை நாம் குழப்புவது எப்படி? இவர்களுடைய மடியிலே இவர்களுக்குத் தெரியாமல் நாம் கையை வைப்பது எப்படி?— ஐயோ, என் ஆசானே! நான் என்னடா, செய்வேன்?

அஞ்சற்க; 'படித்த புத்திசாலிகள்' நமக்குப் பக்கத் துணையா யிருப்பார்கள்' என்கிறாயா?—ஆமாம்—அவர்கள் நல்லவர்கள்; ரொம்ப நல்லவர்கள்; ரொம்ப ரொம்ப நல்லவர்கள்—வயது இடங் கொடுக்கும் வரை அவர்கள் வாழ்க்கையை அனுபவித்து விட்டு, வயது இடங் கொடுக்காதபோது வேதாந்த விசாரத்தில் இறங்கிவிடுவார்கள்; புதுப் புது ரகசியங்களை யெல்

லாம் கண்டுபிடித்துப் புத்தகங்கள் வெளியிடுவார்கள். திண்ணைப் பிரசாரம் தொடர்ந்து நடக்கும். திருத் தொண்டர் குழாமும் சேரும். பரதேசிப் பயல்கள் பாரத நாடெங்கும் பல்கிப் பெருகுவார்கள். 'பசி கோவிந்த'ங்கள் 'பஜகோவிந்தங்களாகும். பண்பாடு பாவங்களின் உறைவிடமாகும்; பக்தியும் முக்தியும் அதற்குப் பட்டுத் திரைகளாகும்—பயமில்லை, பயமே இல்லை!

# 16

இந்த விஷயத்தில் எனக்கு ஏன் இவ்வளவு கவலை, தெரியுமா?—கெட்டுப் போச்சு: காலம் கெட்டுப் போச்சு! ரொம்பக் கெட்டுப் போச்சு; ரொம்ப ரொம்பக் கெட்டுப் போச்சு!—என்னதான் சுற்றி வளைத்துச் சொல்லட்டுமே, எவன் கேட்டுத் தொலைக்கிறான்?—'வேலைக்குப் போக நேரமாச்சு; வெட்டிப் பேச்சை விட்டு விட்டு நீயும் வேலைக்குப் போடா!' என்று கழுத்தைப் பிடித்துத் தள்ளுகிறானே?—இவர்களுக்காக வியர்வை சிந்தினால் நமது மூலதனங்களான விபூதியல்லவா கலைந்து போகும்? நாமமல்லவா கரைந்துபோகும்?

—ம், பாதக் குறடுகளைத் தூக்கச் சொன்னால் பக்தி சிரத்தையோடு தூக்கிக்கொண்டிருந்த பயல்களெல் லாம் இப்போதுதான் பகுத்தறிவைப் பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டான்களே!—இவர்களுடைய நெற்றி யில் விபூதியைத் தேய்த்துப் பூசுவது எப்படி? இவர் களுடைய நெற்றியில் நாமத்தைக் குழைத்துப்

போடுவது எப்படி? — தில்லையம்பலத்து ஆடுங் கூத்தனா, நமது கையைத் தள்ளாமலிருக்க? திருவரங் கத்துப் பள்ளிகொண்ட பெருமானா, நம்மைத் தடுக்காமலிருக்க?—அவர்களுடைய கைகள் அசைவ தில்லை; இவர்களுடைய கைகள்தான் அசைந்து தொலைகிறதே! கடவுளை ஏமாற்றினாலும் ஏமாற்றலாம்; இவர்களை ஏமாற்ற முடியாது போலிருக்கிறதே!

**என்ன சொல்லி என்னடா,**
**என்ன செய்து என்னடா?**
**'உன்னை ஆசை விட்டதா,**
**என்னை ஆசை விட்டிட?**
**என்னை ஆசை விட்டதா,**
**உன்னை ஆசை விட்டிட?'**
**என்றுகேட்கும் இந்த நாளில்**
**என்ன செய்வேன், நானடா!**

வருந்தற்க; சொல்வதுபோல் சொன்னால் பொய் யும் மெய்யாகிவிடும். சொல்; சொல்வதைத் தொடர்ந்து சொல் என்கிறாயா?—சொல்கிறேன்; தொடர்ந்து சொல்கிறேன் :

ஏ, பாபாத்மாக்களே! என்னைப் பிடித்த ஆசை இன்னும் விடவில்லை என்பது வேறு விஷயம்—உங் களைப் பிடித்த ஆசை விட்டதா? விடவில்லையென் றால் அதற்காக நீங்கள் ஆண்டவனைக் கூவி அழைக் கத்தான் வேண்டும்—'என்னதான் கூவியழைத் தாலும் அவர் எங்கே வரப் போகிறார்? எத்தனையோ வருடங்களாக எத்தனையோ பேர் கூவியழைத்தாலும்

அவர்தான் வரவே யில்லையே? என்ற ஐயம் வேண்டாம்; அவர் வந்தாலும் வராவிட்டாலும் நீங்கள் பக்தி நிலைக்கு அவசியம் வந்துவிடுவீர்கள்—அதாவது, பைத்தியக்காரனாகி விடுவீர்கள் என்பது இங்கே உட்பொருள்; எனவே வெளிப்பொருளோடு நிற்க!—அத்தகைய பக்தி நிலைக்கு நீங்கள் வந்துவிட்டால் உடனே சக்தி பெற்றுவிடுவீர்கள். அந்தச் சக்தியின் காரணமாக ஆசைகளை எதிர்க்கும் திறன் வந்து சேர்ந்தோ, அல்லது அதற்கு அவசியமே இல்லாமலோ நீங்கள் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இடம் பெற்றுவிடுவீர்கள்!—அதற்குப் பின் ஓம் சாந்தி, ஓம் சாந்தி, ஓம் சாந்திதானே?—சமூகத்தைப் பற்றி உங்களுக்கும் கவலையில்லை; உங்களைப் பற்றிச் சமூகத்துக்கும் கவலையில்லை. ஆஹா, அந்த நிலையல்லவா பேரானந்த நிலை?—கூவுங்கள்—ஓ, ஆண்டவா! ஓ, ஆண்டவா! ஓ, ஆண்டவா!

நீங்கள் கூவிக்கொண்டே இருங்கள்; நாங்கள் காதும் காதும் வைத்தாற்போல் காரியத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறோம்.

# 17

உங்களுக்குத் தெரியுமா, சக்தி எங்கே இருக்கிறது?—அணுகுண்டிலா, ஹைட்ரஜன் குண்டிலா? அணைக்கட்டிலா, ஐந்தாண்டுத் திட்டங்களிலா?—அவற்றிலெல்லாம் ஒன்றுமில்லை; பக்தியில்தான் இருக்கிறது :

*சக்தியில்லை சக்தியில்லை*
*சக்தியில்லை, இல்லையே!*
*பக்தியின்றிச் சக்தியில்லை*
*சக்தியில்லை, இல்லையே!*
*முக்தியில்லை முக்தியில்லை*
*முக்தியில்லை, இல்லையே!*
*பக்தியின்றி முக்தியில்லை*
*முக்தியில்லை, இல்லையே!*

மனிதன் மண்ணை எப்படி வெல்கிறான்? காற்றை எப்படி வெல்கிறான்? ஆகாயத்தை எப்படி வெல்கிறான்?—எல்லாம் பக்தியால்தான்.

'இது என்ன, பச்சைப் பொய்யாயிருக்கிறதே!' என்கிறீர்களா?—அதுதான் மதம்; அதுதான் சம்பிரதாயம்—அதாவது, அறிவு வேண்டும் ஞானம் வேண்டும் என்று சொல்லிக்கொண்டே அவற்றைக் கொஞ்சங் கொஞ்சமாகக் கொன்றுவிடுவது!

சரி, முக்தி எங்கே இருக்கிறது?—ஒரு முழுங் கயிற்றிலா, ஒரு துளி விஷத்திலா? பாழுங் கிணற்றிலா, பாதை விபத்திலா?—அவற்றிலெல்லாம் ஒன்றுமில்லை; அதுவும் பக்தியில்தான் இருக்கிறது.

சக்தியும் முக்தியும் ஒருங்கே சேர்ந்திருக்கும் இந்தப் பக்தியை அடைய நீங்கள் என்ன செய்ய வேண்டும்?—காசிக்குப் போனால் போதாது; கங்கா ஸ்நானம் செய்தால் போதாது—ஆமாம், எப்பொழுதாவது நாங்கள் 'போதும்' என்று சொல்லி யிருந்தாலும் இப்பொழுது அவை போதவே போதாது—அதற்குமேல் நீங்கள் என்ன செய்ய வேண்டும்?—உள்ளத்தில் இருக்கும் பற்றனைத்தையும் ஒழிக்க

வேண்டும் — அவ்வாறு ஒழிக்கும்போது பகவானின் பற்றையும் சேர்த்து ஒழித்துவிடாதீர்கள்!—அதை நம்பித்தான் எங்கள் வேதங்கள் இருக்கின்றன; புராணங்கள் இருக்கின்றன; இதிகாசங்கள் இருக்கின்றன—கடைசியாக நாங்களும் இருக்கிறோம்; சரிந்து விழுந்த எங்கள் தொந்திகளும் இருக்கவே இருக்கின்றன—என்ன செய்ய?—உண்மையை இவ்வளவு பச்சையாக எடுத்துச் சொல்ல எங்களுக்கு வெட்கமா யிருக்கிறது; அதற்குத்தான் வேதாந்தத்தைக் கட்டிக் கொண்டு அழுகிறோம்; அந்த வேதாந்தத்துக்கு முடிவில்லாத வியாகரணம் செய்துகொண்டிருக்கிறோம்—ஆஸ்திகத்துக்கும் அது இடங் கொடுக்கிறது; நாஸ்திகத்திற்கும் அது இடங்கொடுக்கிறது—அப்படியிருக்கும்போது நீங்களும் அதை ஏன் கட்டிக் கொண்டு அழக்கூடாது? — வாலிபத்தில் கட்டிக் கொண்டு அழமுடியாவிட்டாலும் வயோதிகத்திலாவது கட்டிக்கொண்டு அழக்கூடாதா?—உங்களுக்கும் ஆறுதலாயிருக்கும்; எங்களுக்கும் ஆறுதலா யிருக்குமே!— இல்லாவிட்டால் ஏமாறுபவர்கள் ஏமாறட்டும் என்று நீங்கள் பேசாமலாவது இருங்கள்; உங்களுக்கு வேண்டுமானால் 'பண்பாட்டின் பாதுகாவலர்கள்' என்ற பட்டத்தை நீங்கள் கேட்காமலே நாங்கள் கொடுத்துவிட்டுப் போகிறோம்—எப்படி, நம் உடன் படிக்கை?

# 18

இங்கே 'உடன்படிக்கை'க்குப் பதிலாக ஓர் 'உவமை' சொல்கிறேன் — தாகத்தைத் தேடினால் தண்ணீரைத் தேடவேண்டும் அல்லவா? — ஸ்,

'தாகத்தை யாரும் தேட வேண்டியதில்லை; தானாகவே எடுக்கும்' என்று 'அபசகுனம்போல் யாரும் குறுக்கிடாதீர்கள்!—தாகத்தைத் தேடாமல் இருந்துவிட்டால்? தண்ணீரைத் தேடவேண்டிய அவசியமில்லை. அதே மாதிரிதான் மோகமும்—மோகத்தைத் தேடினால் போகத்தைத் தேடவேண்டும். மோகத்தைத் தேடாமல் இருந்துவிட்டால்? போகத்தைத் தேடவேண்டிய அவசியமில்லை—அதற்கு வழி என்ன?—சொல்கிறேன் சொல்கிறேன், ஆனந்தமாகச் சொல்கிறேன்—நீங்கள் மட்டும் குறுக்குக் கேள்வி போடாமல் இருந்தால், இன்னும் ஆனந்தமாகக்கூடச் சொல்வேன், சொல்வேன், சொல்லிக்கொண்டே இருப்பேன்:

**சாகதாகங் கொள்ளடா,**
**சாகதாகங் கொள்ளடா!**
**மோகதாகம் ஏனுனக்குச்**
**சாகதாகங் கொள்ளடா!**
**சாகதாகங் கொள்ளடா,**
**சாகதாகங் கொள்ளடா!**
**போகதாகம் ஏனுனக்குச்**
**சாகதாகங் கொள்ளடா!**

'செல்வம், செல்வம்' என்கிறீர்களே, எது செல்வம்?—'வேண்டாமை' என்பதே செல்வம்—அதாவது வீடு வேண்டாம், வாசல் வேண்டாம், சோறு வேண்டாம் கறி வேண்டாம், வேட்டி வேண்டாம் சட்டை வேண்டாம்—ஏன், கோவணங்கூட வேண்டாம் என்று சொல்லிவிடுவதே செல்வம்!

இது கொஞ்சம் விரஸமாகப் படலாம்—இருந்தாலும் விஷயத்துக்கு அழுத்தம் கொடுக்க வேண்டு

மல்லவா? — அதற்காகத்தான் ரஸத்தைக் கொஞ்சம் கைவிட்டிருக்கிறேன்; மன்னிக்க.

மற்றவர்கள் 'வேண்டாம், வேண்டாம்' என்று சொல்லவில்லையே என்பதற்காக நீ 'வேண்டும், வேண்டும்' என்று சொல்லிக்கொண்டிருக்காதே!— அவர்கள் விஷயம் புரியாமல் வாழ தாகங் கொண்டு விட்டவர்கள். அதனால்தான் ஆயிரம் வேலி நிலம் இருந்தாலும் இன்னும் ஓர் ஆயிரம் வேலி நிலம் கிடைக்காதா, அவசரமாகப் போவதற்கு ஆகாய விமானம் இருந்தாலும் அதையும் மிஞ்சக் கூடிய அசகாய விமானம் ஏதாவது வராதா என்று எண்ணியெண்ணி, எப்பொழுது பார்த்தாலும் கஷ்டத்துக்கு மேல் கஷ்டம் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள் :— இதற்குக் காரணம் என்ன?—சாகதரகங் கொள்வதிலுள்ள சுகம் அவர்களுக்குத் தெரியாதது தான்!—அந்தச் சுகத்தைக் கண்டவர்கள், அந்தச் சுகத்தைக் கண்டவர்கள்—ஓ, யாரும் இல்லையா? — அதனாலென்ன, சொன்னால் நம்புவதை விட்டுவிட்டு 'முதலில் நீ செத்துக் காட்டு; பின்னால் நான் சாகிறேன்!' என்று நீங்கள் சொல்லவா போகிறீர்கள்?—அதற்குத்தான் மரணத்தை 'மரணம்' என்று சொல்லாமல் 'மோட்சம்' என்று சொல்லி நாங்கள் அப்போதே தப்பித்துக் கொண்டு விட்டோமே —நீங்கள் போங்கள், மோட்சத்துக்கு; சந்தோஷமாகப் போங்கள், மோட்சத்துக்கு; சஞ்சலமில்லாமல் போங்கள், மோட்சத்துக்கு—நாங்களும் உங்களுடன் மோட்சத்துக்கு வந்துவிட்டால் உங்களுக்குப் பின்னால் இருப்பவர்களை யார் மோட்சத்துக்கு அனுப்புவது?— போங்களடா கண்களா, போங்கள்; எங்களைத் திரும்பிப் பார்க்காமல், 'ஏன்?' என்று ஒரு வார்த்தைகூடக் கேட்காமல் போங்களடா கண்களா, போங்கள்!

# 19

எல்லோருக்கும் மோட்ச சாம்ராஜ்யத்தைக் காட்டிய பிறகு, ஆசானின் ஆனந்தம் இந்தப் பாட்டில் உச்ச நிலையை அடைகிறது. 'ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம்' என்று அடுக்கி அடுக்கிச் சொல்கிறார்—ஏன், ஆனந்தத்தின் இடையறாத தன்மையை வேளை தவறாமல் கிடைக்கும் மடத்துச் சாப்பாட்டைப் போல உங்களுக்கு எடுத்துக் காட்ட!

ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தம்
அவனை நினைப்பதே ஆனந்தம்!
ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம்
எவனை நினைப்பதே ஆனந்தம்?
ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம்
அதைக் கேட்காமலிருப்பதே ஆனந்தம்!
ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம்
அதைச் சொல்லாமலிருப்பதே ஆனந்தம்!

'அவனை நினைப்பதே ஆனந்தம்' என்று சொல்லும் போது, 'எவனை நினைப்பது ஆனந்தம்?' என்று நீங்கள் கேட்கக்கூடாது. அப்படி நீங்கள் கேட்காமலிருப்பதும் அதைப்பற்றி நாங்கள் சொல்லாமலிருப்பதுமே ஆனந்தம்—தெரிந்து கொள்ளுங்கள்; இப்பொழுதாவது தெரிந்து கொள்ளுங்கள்.

விஷயத்தை இவ்வளவு சுலபமாகத் தீர்த்துக் கட்டுவதை விட்டுவிட்டு, 'அவன் யார் என்றுதானே கேட்கிறீர்கள்?-அவன்தான் ஹரி என்று வைணவனும் அவன்தான் சிவன் என்று சைவனும் சொல்லிவிட்டு

அவஸ்தைப் படுவதுண்டு; தங்களுக்குள் தாங்களே சண்டையிட்டுக் கொண்டு மண்டையை உடைத்துக் கொள்வதும் உண்டு. ஆனால் அதற்கெல்லாம் காரணம் 'அன்பே' தவிர, இவனுக்கு முன்னால் நாம் ஊரை ஏமாற்றிவிட வேண்டும் என்ற 'ஆத்திரம்' அன்று— நீங்கள்தான் சொல்லுங்களேன், இல்லாதவனை எந்தப் பெயரிட்டு அழைத்தால் என்ன?—எல்லாம் ஒன்றே!— பார்க்கப் போனால் அந்த ஒன்றும் இல்லை என்கிறார் மாணிக்கவாசகப் பெருமான்:

> "ஒருநாமம் ஓருருவம்
> ஒன்றுமில்லானுக்கு ஆயிரம்
> திருநாமம் பாடிநாம்
> தெள்ளேணம் கொட்டோமோ!"

ஆஹா! என்ன கும்மாளம், பாருங்கள்—ஒன்றுமில்லாதவனுக்கு ஆயிரம் திருநாமம் பாடித் தெள்ளேணம் கொட்ட வேண்டுமாம்!—அது மட்டுமா!

> "என்னுடையாரமுது எங்கள் அப்பன்
> எம்பெருமான்இம வான்மகட்குத்
> தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்
> தமையன் எம்ஐயன் தாள்கள்பாடி!"

என்றும் திருவாசகம் செப்புகிறது—அதாவது, சர்வேசுவரனுக்குப் பேதமில்லை. அவருக்குத் தகப்பனும் தமையனும் மட்டுமல்ல; **தாயும் தாரமுங்கூட** ஒன்றே! —அதைக் கண்டு நாம் ஏன் குழம்ப வேண்டும்?— நாமும் அவ்வாறே நடந்து கொண்டால் போச்சு!

'துறவறத்தில் நினைத்தபோதெல்லாம் அவ்வாறு நடந்து கொள்ள முடியாதே!' என்கிறீர்களா?—

அதனாலென்ன, அதற்கும் மாணிக்க வாசகரைப் போன்ற மகான்கள் வழி காட்டியிருக்கிறார்கள்—அதாவது, பற்றற்ற அவர்களுடைய உள்ளம் சிற்றின்பத் தேன் சொரியும் சிறுக்கியைத் தேடி உருகும் போதெல்லாம், அதை இறுக வைக்கப் பின் வருவது போன்ற பாடல்களைப் பாடிப் பகற்போதைக் கழித்திருக்கிறார்கள்:

"தினைத்தனை உள்ளதோர்
பூவினில் தேனுண்ணாதே!
நினைத்தொறும் காண்தொறும்
பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும்பு உள்நெக
ஆனந்தத் தேன்சொரியும்
இனிப்புடை யானுக்கே
சென்றூதாய் கோத்தும்பீ!"

பாடல் எப்படி?—இதே மாதிரி இரவு வரும் வரை நாமும் பேரின்பத் தேன் சொரியும் பெருமானை நாடியிருக்கலாமே! — எல்லாவற்றுக்கும் கொடுக்கிறவன் கொடுக்கும்போது இதிலென்ன கஷ்டம்?—கொஞ்சம் பொறுத்து அனுபவிக்க வேண்டியதை அனுபவித்தால் போச்சு!

## 20

ஆனால் நமக்குக் கொடுக்கும் அவர்களுக்கு நாமும் ஏதாவது கொடுக்க வேண்டாமா?—அதற்கு இதோ வழி!—எமன் வந்து விட்டானா?—எங்கே வந்து

விட்டான்?—வாசலுக்கே வந்துவிட்டானு? உள்ளே நுழைய வேண்டியதுதான் பாக்கியா? பாசக் கயிற்றை வீச வேண்டியதுதான் தாமதமா?—கலங்க வேண்டாம்; கவலை வேண்டாம்;

**எடுஎடு, எடுஎடு,**
**கீதையை எடுஎடு!**
**படிபடி, படிபடி,**
**ஒருவரி படிபடி!**
**எடுஎடு, எடுஎடு,**
**கங்கையை எடுஎடு!**
**குடிகுடி, குடிகுடி,**
**ஒருதுளி குடிகுடி!**

என்ன, குடித்துவிட்டாயா? — அதோ பார் எருமைக் கடாவுக்கு முன்னுல் எமன் எடுக்கிருன் ஓட்டம்!

அவ்வளவுதான்; அதற்குமேல் அங்கே நிற்காதீர்கள்—'என்னவே, செப்படி வித்தை காட்டுதே?' என்று எவனுவது திருநெல்வேலி வேளாளன் பாஷையில் கேட்டாலும் சரி, 'ஆ பப்பு உடுக்கதண்டி!' என்று எவனுவது சென்னை கோமுட்டி பாஷையில் சொன்னுலும் சரி—காதில் விழாததுபோல் நழுவி விடுங்கள்; இல்லாவிட்டால் எமனை நீங்கள் விரட்டுவதற்கு முன்னுல் உங்களை அவர்கள் விரட்டி விடுவார்கள்.

அப்படி நழுவ முடியாதவர்கள் எதற்கும் முதுகில் தலையணையைக் கட்டிக் கொண்டு செல்வது நல்லது!

# 21

இவ்வளவு தூரம் நம்மை எச்சரித்த பிறகு ஆசான் இப்போது அழுகிருர்—ஏன் அழுகிருர்?—பிறவிக் கடலைத் தாண்ட வேண்டுமாம்—ஏன் தாண்ட வேண்டுமாம்? — ஊரை ஏமாற்றி, உழைக்காமல் உண்ணத்தான்!—அதற்கு ஆண்டவன் கூறும் ஆறுதல் என்ன?—பாடலைப் பாருங்கள் :

'வேண்டுகின்றேன் வேண்டுகின்றேன்
வேண்டுகின்றேன், கடவுளே!
பிறவிக்கடல் தாண்டஉன்னை
வேண்டுகின்றேன், கடவுளே!'
'பிறவிக்கடல் தாண்டவிஷம்
இருக்கும்போது, பக்தனே!
என்னை எதற்கு வேண்டவேண்டும்?
எடுத்துக்குடிப்பாய், பக்தனே!'

ஆண்டவன் இவ்வாறு சொல்லிவிட்டான் என்பதற்காக அவன் உண்ட ஆலகால விஷத்தை எடுத்துத் தானும் உண்டு பிறவிக் கடலைத் தாண்டி விடவில்லை ஆசான்—அவ்வாறு தாண்டிவிட்டால் அடியான்களின் கதி என்ன?—அதனுல்தான், 'பிறவிக் கடலைத் தாண்ட வேண்டுமென்று சொல்ல வேண்டியவர்கள் நாங்கள்; தாண்ட வேண்டியவர்கள் நீங்கள்' என்கிருர் ஆசான்—தாண்டுங்கள் அதுவே கீதா சுலோகம்;

"ஸர் தர்மான் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வாஸர்வ பாபேப்யே
மோக்ஷயிஷ்யாமி மாசுச!'

'மாசுச' என்றால், 'துயரத்தோடு சாக வேண்டாம்; சந்தோஷத்தோடு சாகுங்கள்!' என்று பொருள்—இது பகவான் வாக்கு; வியாசரின் வாக்கல்ல—அதாவது, பகவான் வியாசரைச் சிருஷ்டித்தார்; வியாசர் பகவானைச் சிருஷ்டித்தார். அவ்வளவுதான் விஷயம்; அதற்கு மேல் கேட்டால் அவனை 'நாஸ்திகன்' என்று அப்போதைக்கு ஒதுக்கி விடுங்கள்!

# 22

எல்லாவற்றுக்கும் லட்சணங்கள் இருபபது போல ஞானிகளுக்கும் லட்சணங்கள் இருக்கின்றன. அந்த லட்சணங்கள் என்னென்ன? — ஆசான் சொல்கிறார் :

எச்சில் இலையைக் கண்டதும்
எடுத்து நக்கித் தின்பவன்,
கந்தைத் துணியைக் கண்டதும்
கட்டி மனங் களிப்பவன்,
இச்சை கொண்ட போதெலாம்
இளித்துப் பெண்ணைப் பார்ப்பவன்,
எவனோ அவன் ஞானிடா,
எடுத்துச் சொன்னேன், பாரடா!

ஏ அஞ்ஞானிகளே! கேட்டீர்களா, மெய்ஞ்ஞானிகளின் லட்சணங்களை?—எவரும் எளிதில் அடைய முடியாத இந்தப் 'பேரின்பங்கள்' எதனால் அவர்களுக்குச் சித்தித்தன?—'படித்தால் கர்வம் வந்து விடுமே!' என்று தற்குறியாகத் திரிந்து, 'பெற்றோரை நேசித்தால் பற்று வந்து பற்றிக்கொண்டு விடுமே!' என்று அனாதையாக அலைந்து, உரிய வயதில் உழைத்துப் பொருளீட்டினால் உயிராசை வளர்ந்து நம்மை உயர்ந்தோனாக்கி விடுமே!' என்று ஊர் ஊராய்ச் சுற்றி, 'காலாகாலத்தில் கல்யாணம் செய்து கொண்டுவிட்டால் கண், காது, மூக்கு, வாய் ஆகிய நான்கு மூர்க்கரோடு ஐந்தாவது மூர்க்கரான 'அவ'ரையும் ஒருவாறு அடக்கி அதன் பயனாக ஒழுக்கம் பிழைத்துவிடுமே!' என்று எவளைப் பார்த்தாலும் இளித்து, கணவன் மறைந்த பின் கடவுளைத் தேடி வரும் காசுள்ள கைம்பெண்களுக்கு மோட்ச லோகம்' காட்ட முயன்று, கோயிலில் கடவுளைக் காணவிட்டாலும் குப்பையில் எச்சிற் சோற்றையாவது காணலாம்' என்று கண்டதை எடுத்து உண்டு களித்து, சமூகத்துக்குத் தொல்லையாக, தேசத்துக்குச் சாபக்கேடாக, உலகத்துக்கு உதவாக்கரையாக உழன்று நெளிந்து புழுத்து மறைந்ததாலல்லவா அவர்கள் ஞானியானார்கள்?—அவர்கள் அடைந்த பேற்றை நீயும் அடைய வேண்டாமா? அவர்கள் அடைந்த ஞானத்தை நீயும் அடைய வேண்டாமா? அவர்களைப் போலவே நீயும் பேறு பெற வேண்டாமா? அவர்களைப் போலவே நீயும் ஞானியாக வேண்டாமா?—படி; மாணிக்க வாசகர் அச்சோப்பதிகத்தில் வியந்து மகிழ்ந்து பாடியுள்ள பாடல்களைப் படி,—ஞானம் முற்றி ஆடும்

போது தகர டப்பாவில் தாளம் போட்டுக்கொண்டே, பாட வசதியா யிருக்கும்—படித்துப் பட்டம் பெற்று பதவியைத் தேடிப் பிடித்து, பணத்தோடு பணம் சேர்த்து, 'பாண்டியாக்' காரில் பவனி வரும் எங்களுக்கும் எங்கள் மனைவி மக்களுக்கும் அதுவே கண்கொள்ளாக் காட்சி, அதுவே கண் கொள்ளாக் காட்சி!

# 23

அத்தகைய கண்கொள்ளாக் காட்சிகளை நாங்கள் காணவேண்டுமானால் நீங்கள் வேதாந்தத்தைக் கடைபிடிக்கவேண்டியது முக்கியம்—அப்படி என்றால் என்ன?—சுருக்கமாகச் சொல்கிறேன்—இந்த உலகில் நாம் காண்பதெல்லாம் கனவு; காணாததெல்லாம் நனவு—இதுவே வேதாந்தம்—இந்த வேதாந்த விசாரத்தில் இறங்க வேண்டுமானால் நீ என்ன செய்ய வேண்டும்? — வாழ்க்கை விசாரத்தைக் கைவிட வேண்டும்; அவ்வளவே. அதற்கு வழி என்ன? சைவமும் வைணவமும் ஒன்றே என்றாலும், 'கல்யாணக் குணங்கள்' நிறைந்த வைணவச் சம்பிரதாயத்தை யொட்டியே சொல்கிறேன் :

*போடு போடு கோவிந்தா,*
*போடு போடு, கோவிந்தா!*
*நானுமில்லை நீயுமில்லை*
*போடு போடு, கோவிந்தா!*
*போடு போடு கோவிந்தா,*
*போடு போடு கோவிந்தா!*
*நீயுமில்லை நானுமில்லை*
*போடு போடு, கோவிந்தா!*

கண்டுகொண்டாயா, வழியை? — இங்கே நீயும் நானும் இல்லையென்றால் அங்கே மட்டும் என்ன இருக்கும்? — அதைப்பற்றி யோசிக்காதே! — அப்படி யோசிக்க வேண்டுமென்று தோன்றினால் உடனே போட்டுவிடு, கோவிந்தா!

'கோவிந்தா, கோவிந்தா, கோவிந்தா!'

ஆஹா! இப்போது அந்த யோசனையே அடிபட்டுப் போய்விட்டது, பார்த்தாயா?—அதுவே வழி: அதுவே வழி! — பிடித்துக்கொள்; கெட்டியாகப் பிடித்துக்கொள்!

விட்டுவிடாதே! — விட்டால் 'உலகில் புலனாகும் பொருள்களனைத்தும் மெய்ப்பொருளிலிருந்து உண்டான பொய்ப்பொருள்கள் என்கிறார்களே, அப்படியானால் அந்தப் பொய்ப் பொருள்களை மெய்ப் பொருள் ஏன் படைத்தது? படைத்துவிட்டு எல்லாம் வெறுங் கனவு, எல்லாம் வெறுங் கனவு என்று ஆசானையும் அடியானையும் ஏன் கதறவைக்கிறது?' என்றெல்லாம் உனக்குக் கேட்கத் தோன்றும். அதற்கு இடங் கொடுக்காதே: கொடுத்தால் நாஸ்திகனாகி விடுவாய்—போடு, கோவிந்தா! போட்டு விடு, கோவிந்தா!—வாழ்க்கைக்குக் கோவிந்தா! வளத்துக்குக் கோவிந்தா!—கோவிந்தா, கோவிந்தா, கோவிந்தா! — சங்கராச்சாரிய சுவாமிகளே, சரணம்!

# 24

இதோ பார், 'அவன் வாழ்கிறானே, நாம் வாழவில்லையே!' என்று நீ ஏன் கவலைப்படுகிறாய்? ஏன் பொறாமை கொள்கிறாய்? ஏன் கோபங் கொள்கிறாய்? அவற்றை வளர்த்து ஏன் வாழ வழி கோலுகிறாய்?

உனக்கு நீதி வழங்காத அரசியலை எப்படியாவது கைப்பற்றிச் சமநீதி சமுதாயத்தை அமைக்க ஏன் துடிக்கிறாய்? — அவன் நன்றாயிருந்தால் அது அவன் செய்த புண்ணியம்; நீ நன்றாயில்லாமல் இருந்தால் அது நீ செய்த பாவம்! —இது நம் தர்மமன்றோ? இந்தத் தர்மத்தைக் கடைப்பிடிக்கும் நமக்கு உலகிலுள்ள உயிர்களெல்லாம் கோவிந்தனின் கோயில்கள் அன்றோ? தம்பியான உன் உயிரும் அண்ணனை அவன் உயிரும் ஒன்றேயன்றோ? — அப்படி யிருக்கும் போது,

**கோபம் வேண்டாம் அண்ணே,**
**போட்டநாமம் ஒண்ணே!**
**தம்பி போட்ட நாமம்**
**அண்ணன் நெற்றிக்காச்சு!**
**அண்ணன் போட்ட நாமம்**
**தம்பி நெற்றிக்காச்சு!**
**கணக்குத் தீர்ந்து போச்சு.**
**காரியமும் ஆச்சு!**

என்று எங்கள் ஆசான் பாட்டுக்கு நீ எதிர்ப் பாட்டுப் பாடலாமா? பதிலுக்குப் பதில் நாமத்தைப் போடலாமா? —ஓஹோ, அண்ணன் தம்பியா யிருந்தாலும் வாயும் வயிறும் வேறன்றோ? — மறந்து விட்டேன்; மறந்தே விட்டேன் — அதனால்தான் பரஸ்பரம் நாமத்தைப் போட்டுக் கணக்கைத் தீர்த்துக்கொண்டு விட்டீர்களோ?—சரிதான், சரிதான்! — சாஸ்திரத்துக்கு இது விரோதமாயிருந்தாலும் சமூக தர்மத்துக்குச் சரிதான், சரிதான்!

'என்னடா, அடியான் இதை மட்டும் இப்படி ஆமோதிக்கிருனே?' என்று கலங்கவேண்டாம் — குடும்பம் இரண்டானல் கூத்தாடிக்கு மட்டுமல்ல; எங்களுக்கும் கொண்டாட்டந்தான்!

ஆனல் ஒன்று—இதனல் விபூதிக்கும் நாமத்துக்கும் சண்டை வேண்டாம்—போடுவது, அல்லது போட்டுக் கொள்வது எதுவாயிருந்தாலும் பொருள் ஒன்றே; இரண்டல்ல என்பது நினைவிருக்கட்டும்!

# 25

பார்க்கப்போனல் எது சமர்த்து? எதிர்ப்பை வளர்த்து இரண்டி லொன்றைத் தீர்த்துக்கொள்வதா சமர்த்து?—இல்லை; அத்துடன் பற்றையும் சேர்த்துக் குழப்புவதுதான் சமர்த்து!—எந்தப் பக்கமும் வெற்றி தோல்வி இல்லாமல் இருந்தால் தானே எந்தப் பிரச்னையும் தீராமல் இருக்கும்? ஏதோ ஏமாந்த வரை லாபமும் கிடைக்கும்?—ஆடு; ஆடிக்கொண்டே பாடு!

**ஆடு ஆடு கோவிந்தா,**
**நானே நீ கோவிந்தா!**
**ஆடு ஆடு கோவிந்தா,**
**நீயே நான் கோவிந்தா!**
**ஆடு ஆடு கோவிந்தா,**
**அவனே எல்லாம் கோவிந்தா!**
**ஆடு ஆடு கோவிந்தா,**
**அதுவே சமர்த்து கோவிந்தா!**

ம், ஆடு! ஆடிக்கொண்டே பாடு!—'நானே நீ; நீயே நான்' என்று வெறும் வாயால் சொல்லி விடுவதால் ஒன்றும் குடிமுழுகிப் போகாது; தாராளமாகச் சொல், கிட்ட வரும்போது, 'எட்டி நில்!' என்று அதட்டி விரட்டிவிடலாம்—ம், ஆடு! வெட்கப் படாதே; ஆடு!—தற்குறிகள் மலிந்த தமிழ்நாட்டில் நீ தைரியமாக ஆடலாம்; யாரும் உன்னைப் பார்த்துச் சிரிக்கமாட்டார்கள்—அதற்குப் பதிலாகக் கன்னத்தில் போட்டுக் கொள்வார்கள்; கற்பூர ஆரத்தி காட்டுவார்கள்; காணிக்கை செலுத்திக் கைகூப்பித் தொழுவார்கள்!

இந்தக் கேலிக் கூத்து தொடர்ந்து நடக்கட்டும்; எந்தப் பாவாத்மாவாவது உன்னைத் தேடி வரும். புண்ணியத்தைச் சம்பாதித்துக் கொள்ளவோ, அல்லது புத்திர பாக்கியத்தை அடையவோ தனக்கிருக்கும் சொத்துக்களை யெல்லாம் உன்னுடைய பஜனை மடத்துக்கு எழுதி வைக்கும். அதற்குப் பின் அதை நீ பிருந்தாவன மாக்கிவிடலாம்; பால் பேதமின்றி ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்து பஜனை செய்யலாம்; கோவிந்தன் திருவடிக்கு முன்னால், 'நீ யார், நான் யார்? உன் மனைவி யார், என் மனைவி யார்? உன் கணவன் யார், என் கணவன் யார்? எல்லாம் ஒன்றே, எல்லாம் அவனே, எல்லாம் அவன் திருவிளையாடலே!' என்று இரண்டறக் கலக்கலாம். பாவத்தைப் புண்ணியத்தில் தள்ளலாம்; நரகத்தை மோட்சத்தில் தள்ளலாம்—ஆஹா! எவ்வளவு அற்புதமான வாழ்க்கை! எவ்வளவு ஆனந்தமான வாழ்க்கை!

ஆடு; ஆடிக் கொண்டே பாடு!

*ஆடு ஆடு கோவிந்தா,*
*நானே நீ கோவிந்தா!*
*ஆடு ஆடு கோவிந்தா,*
*நீயே நான் கோவிந்தா!*

ஆண்டாள் திருவடிகளே சரணம்—இந்த ஆண்டாள் 'அந்த ஆண்டா'ளாகத்தான் இருக்கவேண்டுமென்பதில்லை; எந்த ஆண்டாளாகவும் இருக்கலாம்!

# 26

'இம்மையில் பாவம் செய்பவர்கள் மறுமையில் அந்தப் பாவத்துக்குரிய பலனை அனுபவிப்பார்கள்' என்று இதுவரை சொல்லிவந்த ஆசான், இப்போது 'இம்மையில் பாவம் செய்பவர்கள் இம்மையிலேயே அதன் பலனை அனுபவிப்பார்கள்!' என்று மிரட்டுகிறார்—ஏனெனில், மறுமையில் எதையும் அனுபவிக்க விரும்பாமல் இம்மையிலேயே அவர் எல்லாவற்றையும் அனுபவிக்க விரும்புகிறார், பாருங்கள்—அதனால்தான்!

அதற்காகச் சொல்வதை அவர் ஒரு முறை சொல்லவில்லை; பல முறை சொல்கிறார்—வருத்தத்துடன் சொல்கிறார்; மகிழ்ச்சியுடன் சொல்கிறார்; அழுதுகொண்டே சொல்கிறார்; ஆனந்தக் கூத்து ஆடிக்கொண்டே சொல்கிறார்—இத்தனைக்கும் அவரிடம் அகப்பட்டுக்கொண்டு விழிப்பவை நாலே நாலு விஷயங்கள்—அவை படும் பாடு நடு நிசியில் நாலு

சாமியார்களுக்கு நடுவே அப்பாவி விதவை யொருத்தி அகப்பட்டுக்கொண்டு படும்பாடு போலிருக்கிறது!

**நாலுங் கண்ட மூடா,**
**நம்பி என்னை வாடா!**
**கோலுங் குடியும் வேண்டாம்,**
**கோவணத்தைக் கட்டு!**
**க்ஷேமம் உனக்குச் சொல்வேன்,**
**சிரம் வணங்கிக் கேளு!**
**நாமம் போட்டுக் கொள்வாய்,**
**நாலும் பறந் தோட!**

காமமும் மோகமும், கோபமும் தாபமும் இல்வாழ்க்கைக்கென்று அமைந்த இயற்கை நியதிகளா யிருந்தால் என்ன? நாங்கள் சொல்லும் கடவுளே அவற்றுக்கு நாயகனுயிருந்தால்தான் என்ன?—அதற்காக எத்தனை 'ருத்ராட்சப் பூனைகள்' எதிர்த்தாலும் அவற்றை நீங்கள் இப்படியா விடாப் பிடியாகப் பற்றிக்கொண்டிருப்பது? அப்படியே பற்றினுலும் அதற்காக எங்கள் காலையே வாரிவிடவா பார்ப்பது?—சீசீ, 'நீயும் நானும் எதற்குமே காரணமாயிருக்கவில்லை; எல்லாவற்றுக்கும் நம்முள் குடிகொண்டிருக்கும் ஆன்மாவே காரணம்; அந்த ஆன்மாவே கடவுள்; அவன் செயலே எல்லாம்!' என்று நாங்கள் ஏதோ ஒரு பேச்சுக்கு எப்போதோ சொன்னுலும் சொன்னேம், அதை விடவே மாட்டோம் என்கிறீர்களே! சந்தர்ப்பத்துக்கு ஏற்றார்போல் அதைக் கொஞ்சம் மாற்றிச் சொன்னல் கேட்கவே மாட்டோம் என்கிறீர்களே?—இதோ பாருங்கள், ஆனைப்பட்ட எங்கள் கீதாசாரியனே சந்தர்ப்பத்துக்கு ஏற்றாற்போல் தாளம் போடுவதை:

'காமமும் ராஜோவேகமும் நீங்கிய சக்தியை மக்களிடத்தில் கண்டால் அந்தச் சக்தி நானே என்று அறிவாய்; தருமத்துக்கு முரண்படாத ஆசை மனிதர்களின் உள்ளத்தில் தோன்றினால் அந்த ஆசை நானே என்று அறிவாய்!'

இவ்வாறு பகவானே சொல்லிவிட்ட பின் 'அப்பீல்' எதற்கு? 'தருமத்துக்கு முரண்படாத ஆசைகளுக்குப் பகவான் காரணமென்றால், தருமத்துக்கு முரண்பட்ட ஆசைகளுக்கு யார் காரணம்?' என்று நீங்கள் திருப்பிக் கேட்பதுதான் எதற்கு?

அப்படியே திருப்பிக் கேட்டாலும் அதற்குத் தான் அவ்வப்போது 'தத்துவ ஒத்தடம்' கொடுத்துக் கொண்டிருக்கிறோமே, அது போதாதா?—கோயில் திருப்பணி செய்தல், கும்பமேளா கொண்டாடுதல், மடத்தைக் காத்தல், மடாதிபதிகளின் தொந்தியை வளர்த்தல் ஆகிய நான்கும் தருமத்துக்கு முரண்படாத ஆசைகளொன்றும், கல்யாணம் செய்து கொள்ளல், கட்டிக்கொண்ட மனைவியையும் பெற்றெடுத்த பிள்ளைகளையும் காத்தல், அதற்காகப் பொருளீட்டல், இதை யாராவது அபகரித்துக் கொள்ளப் பார்த்தால் அவர்களை வெறுத்தல் ஆகிய நான்கும் தருமத்துக்கு முரண்பட்ட ஆசைகளென்றும் சொல்லி, எங்கள் 'தத்துவ ஒத்தட'த்தைப் பிடுங்கி ஏன் விட்டெறிகிறீர்கள்?

அட, பாவிகளா!—அந்த நாலுக்குப் பதிலாகத் தான் இன்னொரு நாலை நாங்கள் கண்டுபிடித்திருக்கிறோமே, அவற்றை நீங்கள் அப்படியே ஏற்றுக் கொண்டால் என்ன?—பாவம் புண்ணியம், நரகம்

மோட்சம்—ஆஹா! சொல்லும்போதே இனிக்குதடா, எங்கள் நெஞ்சம்! உங்களுக்கு மட்டும் ஏன் கசக்கிறது?—வேண்டுமானால் 'ஆன்ம ஞானம்' என்ற தேனில் அந்த நாலையும் சேர்த்துக் குழைத்துக் கொடுக்கட்டுமா?

இதோ, எங்கள் ஆசான் அள்ளி அள்ளி விட்டதை நான் அப்படியே வழித்து உங்களுடைய உள்ளங் கையில் விடுகிறேன், பாருங்கள்:

ஆசையை அடக்கும் ஆன்ம ஞானம் சந்நியாசி களுக்கு மட்டுமல்ல—சம்சாரிகளுக்கும் வேண்டும்: அதிகமாகவே வேண்டும். 'என்ன அடியான் இப்படிச் சொல்கிறானே?' என்ற ஐயம் வேண்டாம், தானம் என்பது ஒருவன் கொடுப்பதும் இன்னொருவன் வாங்கு வதுமாகும். எனவே, கொடுப்பவனுக்கு ஆசை கொஞ்ச மாகவும், வாங்குபவனுக்கு ஆசை அதிகமாகவும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் சந்நியாசிகள் வாழ தாகமும், சம்சாரிகள் சாக தாகமும் கொள்ள முடியும்.

அப்படிச் செய்யாமல் ஆசையையும் கோபத்தை யும் நீங்கள் வளர விட்டுக்கொண்டே போனால் இம் மையே எங்களுக்கு நரகமாகி விடும்—என்ன, எங்களுக் கென்று சொன்னேன்? —இல்லையில்லை, உங்களுக்குத் தான்!

# 27

அந்தக் காலத்து அரசர்களுக்கும் இலக்கியத் துக்கும் எவ்வளவு தூரம் சம்பந்தம் இருந்ததோ அவ்வளவு தூரம் இந்தக் காலத்தில் ஏழைகளுக்கும்

இலக்கியத்துக்கும் சம்பந்தம் உண்டு — எனவே. ஆசான் அவர்களையும் ஒரு பார்வை பார்த்து வைக்கிறார்—ஆனால் எப்படிப் பார்க்கிறார்?

ஏழை வாழ வேண்டும்
எந்த முறையில் என்றால்,
தன்னை நம்பி வாழத்
தலை நிமிர்ந்து நின்றால்,
கூழைக் கரைத்து ஊற்று!
குனிந்து குடிக்கச் சொல்லு!
உன்னை நம்பி வாழ்வான்,
உருப்படாமல் போவான்!

பார்த்தீர்களா, இதற்குத்தான் ஆன்ம ஞானம் பெற வேண்டும் என்பது!— அந்த ஞானத்தை எப்படிப் பெறுவது?—பஜகோவிந்தம் பாடிப் பாடிப் பெற வேண்டும்; பகவத் கீதை ஓதி ஓதிப் பெற வேண்டும்— அப்படி ஓதும்போது சொன்னதையே சொல்லும் குற்றமும் குழப்பமும் உனக்குத் தோன்றலாம்—அதற்காக நீ என்ன செய்ய வேண்டும்? —பக்தியோடு படிக்க வேண்டும்— எப்படி? — கோயிலுக்குள் செல்லும்போது செருப்பைக் கழற்றி ஒரு மூலையில் வைத்துவிட்டுச் செல்கிறாயல்லவா? அதேமாதிரி முடிந்தால் உன்னுடைய மூளையைக் கழற்றி ஒரு மூலையில் வைத்து விட்டுப் படிக்க வேண்டும்.

என்ன படித்தாலும், என்ன செய்தாலும் உயிர் பெற்ற ஜீவன் சும்மா இருக்க முடியாதுதான்: சுபாவத்தின் பயனாக அது செயலில் புகுந்தே தீரும். ஆனால் அதற்காகச் சாஸ்திரத்தையும் சம்பிரதாயத்தையும்

மறந்து, அனுவசியமாகப் பொறுப்பேற்றுக்கொண்டு அவதிப்படக் கூடாது !

பாலில் உள்ள சத்து நெய். அதுபோல் சந்நியா சத்திலுள்ள சத்து பற்றறுத்தல்; செயலின்மையல்ல. செயல் படு; செயலைத் துறக்கப் பார்ப்பது வீண். 'என்ன அடியான் இப்படிக் குழப்புகிறனே?' என்று தவிக்கவேண்டாம்; அதுவே தத்துவம்.

அவ்வாறு செயல்படுவது சந்நியாசத்துக்கு விரோதமாயிருந்தால், அதற்குச் சமாதானம் சொல்லக் கீதை இருக்கவே இருக்கிறது—என்ன கவலை, உனக்கு? —உடனே ஆரம்பித்துவிடு உபதேசத்தை!

ஆனல் 'அமிர்தாஞ்சன'த்ததைத் தேடுவதற்கு முன்னல் அதைக் கேட்கும் ஆளை மட்டும் விட்டு விடாதே! அத்துடன், ஒருவன் ஏழையா யிருப்பதற்குக் காரணம் அவன் செய்த பாவந்தான் என்று சொல்வ தோடும் நின்றுவிடாதே!—அப்படி நின்றுவிட்டால் உன்னுடைய உபதேசத்தைக் கேட்கக் கூட்டம் சேராது. எனவே, உனக்குக் கொடுத்தது போக மீதி ஏதாவது இருந்தால் அவனுக்கும் கொடுக்கச் சொல்— அதனல் நமக்கு என்ன நஷ்டம் வந்து விடப் போகிறது?

## 28

மேலே 'செயல் படுவது எப்படி?' என்பதை விளக்கிவிட்டுக் கீழே 'பொது'மகளோடு போகம் செய்தால் ரோகம் வந்துவிடும்!' என்று ஆசான்

எச்சரிக்கிருர்—அனுபவம் மிக்க எச்சரிக்கை: அவசியம் மிக்க எச்சரிக்கையுங்கூட.

ஏனென்ருல், ஆணும் பெண்ணும் ஒருவரை யொருவர் நெருங்கியவுடனே செயல்படுவது மேல் நாட்டில் குறைவாகவும் கீழ் நாட்டில் அதிகமாகவும் இருக்கிறது—இதற்கு என்ன காரணம்?

'மேல் நாட்டார் பெண்ணில் மட்டும் அல்ல—அருங்கலைகள், ஆடல் பாடல்கள், இயற்கைச் சௌந்தரியங்கள்—ஆகியவற்றிலும் இன்பங் காண லாயக்குள்ளவர்களாயிருக்கிருர்கள். கீழ் நாட்டாரோ அப்படியல்ல; அவர்களில் பெரும்பாலோர் பெண்ணைத் தவிர வேறு எதிலுமே இன்பங் காண லாயக்குள்ளவர்களாயில்லை!' என்று நாம் சொல்லிவிட்டால் மட்டும் போதுமா? அவர்களுடைய பரிதாப நிலைக்குப் பரிகாரம் தேட வேண்டாமா?— இதோ ஆசான் தேடுகிருர்:

**கஞ்சிக்காகக் கற்பை**
**அஞ்சிவிற்கும் பெண்கள்,**
**காசுக்காகக் கற்பைப்**
**பேசி விற்கும் பெண்கள்,**
**வஞ்சகர் பசப்பில்**
**வழுக்கி விழும் பெண்கள்,**
**நஞ்சு தோய்ந்த பெண்களாம்,**
**நாட வேண்டாம், அவர்களை!**

சொல்லிவிட்டார், ஆசான்—இனி எந்த முறையில் செயல்பட வேண்டுமோ, அந்த முறையில் செயல்படுவீர்களாக!

# 29

தருமத்தைப் பற்றிப் பேசும்போதெல்லாம் இந்தக் காலத்தில் தரித்திரத்தைப் பற்றிப் பேசுவது வழக்க மாகிவிட்டது. 'அவர்கள் நினைப்பதுபோல் தருமமும் தரித்திரமும் இரண்டல்ல; ஒன்றே. தருமம் தழைத் தால்தான் தரித்திரம் நிலைக்கும்; தரித்திரம் நிலைத்தால் தான் தருமம் தழைக்கும். 'எல்லோருக்கும் வேலை; எல்லோருக்கும் கூலி' என்பதெல்லாம் அர்த்தமற்றுப் போய்ச் சரித்திரம் என்றும் சரியாமல் நிற்கும்—இதற்கு நீங்கள் என்ன செய்ய வேண்டும்?—பெருமை மிக்க ஆசான் அருமையாகச் சொல்கிறார்:

***தருமம் தழைக்கவே***
***தரித்திரம் நிலைக்கவே,***
***சரித்திரம் என்றும்***
***சரியாமல் இருக்கவே,***
***பொருளாசை கொள்வோர்,***
***பொருளாசை கொள்ளவே,***
***அருளாசை கொண்டு***
***அலைவாய், நீ அலைவாய்!***

இந்த விஷயத்தை இதற்குமுன் எத்தனையோ இடங்களில், எத்தனையோ கோணங்களில் ஆசான் உங்களுக்கு எடுத்துச் சொல்லியிருக்கலாம்; அடி யானும் அதற்குச் சாங்கோபாங்கமாக வியாகரணம் செய்திருக்கலாம். அதனாலென்ன, தமிழ்நாட்டில் தான் இப்போது பைத்தியக்காரர்களுக்குப் பஞ்சமாய்ப் போய்

விட்டதே! —நாம் அதைத் தீர்க்க வேண்டாமா?— அதனுல்தான் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லவேண்டி யிருக்கிறது; குழப்பியதையே திருப்பித் திருப்பிக் குழப்பவேண்டி யிருக்கிறது— வேறு வழி?

# 30

விஞ்ஞானம் தெரியாத அஞ்ஞானிகள் சிலர் ஐம்பூதங்களைப் பற்றி ஆராய்வதே 'விஞ்ஞானம்' என்று கருதுகின்றனர். அது தவறு; ஐம்புலன்களைப் பற்றி ஆராய்வதே விஞ்ஞானம்; அதுவே மெய்ஞ் ஞான முங்கூட.

**அஞ்சும் உன்னைக் கெஞ்சும்,**
**அசைந்தால் கொஞ்சம் மிஞ்சும்!**
**கொஞ்சும் வாயும் மூக்கும்**
**கண்ணுங் காதும் போக,**
**எஞ்சி யிருக்கும் ஒன்ருல்**
**என்ன துன்பம், துன்பம்!**
**அஞ்ச வேண்டாம், அடக்கு!**
**அதுவே இன்பம், இன்பம்!**

'அது எப்படி இன்பமாகும்?' என்று அவசரப் பட்டுக் கேட்காதே!—ஸ், அடக்கு! — ரகசியமாகச் சொல்கிறேன், அடக்கென்ருல் அடக்கு ! — உனக் காக நான் அப்படிச் சொல்லவில்லை ; உனக்குத் தான தருமம் செய்பவர்களுக்காக அப்படிச் சொல்கிறேன்—

அடக்கென்ருல் அடக்கு! — முடிந்தவரை 'பிரஜா உற்பத்தி'யைக் குறைத்துக் கொண்டு வந்தால்தானே அவர்களால் நமக்கு அடிக்கடி 'சமாராதனை' நடத்த முடியும்? சாப்பிட்டு முடிந்தபின் வயிற்றில் சந்தனத்தைப் பூசிக்கொண்டு நம்மால் புரள முடியும்?— 'அடக்கு; அடக்கென்ருல் அடக்கு!'—இதுவே நமது தாரக மந்திரமாக என்றும் எப்பொழுதும் எங்கும் ஒலிக்கட்டும், ஒலிக்கட்டும், ஒலித்துக் கொண்டே இருக்கட்டும்!

# 31

'பசிகோவிந்த'த்தின் கடைசிப் பாட்டு இது. இதற்கு முன் வெளியான முப்பது பாடல்களையும் பசியோடு பாடியவர்கள் இதையும் பசியோடு பாடுவார்களாக. கண்கள் இருண்டாலும் காதை அடைத்தாலும் பசியோடு பாடுவார்களாக; கைகள் சோர்ந்தாலும் கால்கள் வெலவெலத்தாலும் பசியோடு பாடுவார்களாக; வயிற்றைக் கிள்ளினுலும் வாடி வதங்கினுலும் பசியோடு பாடுவார்களாக. பசியே பக்தி; பக்தியே பசி!— எங்கே, 'பக்தர்கள்' அனைவரும் சேர்ந்தாற்போல் பாடுங்கள்—பார்க்கலாம்.

*சரணம் சரணம் சரணம்,*
*பசியே பக்தி சரணம்!*
*சரணம் சரணம் சரணம்,*
*பக்தியே சக்தி சரணம்!*

*சரணம் சரணம் சரணம்,*
*சக்தியே முக்தி சரணம்!*
*சரணம் சரணம் சரணம்,*
*முக்தியே மரணம் மரணம்!*

ஆம், சூட்சுமத்தில்தானே இருக்கிறது மோட்சம்? இது தெரியவில்லையே, உங்களுக்கு! —தெரிந்தால் 'அந்தச் சூட்சுமத்தில்தானே உங்களுடைய வாழ்வும் எங்களுடைய தாழ்வும் இருக்கிறது!' என்று நீங்கள் எங்களையே திருப்பிக் கேட்பீர்களா?—அறியாமை! அறியாமையிலும் அறியாமை!

கேளுங்கள்; பக்தி சிரத்தையோடு கேளுங்கள்:

பசி எடுத்தால் பக்தி பறக்கலாம்; சக்தி பறக்குமோ?—பறக்காது.

சக்தி பறந்தால் பக்தி பறக்கலாம்; முக்தி பறக்குமோ?—பறக்காது.

முக்தி பறக்காவிட்டால் மோட்சம் எப்படிப் பறக்கும்?— பறக்காது; பறக்காது; பறக்கவே பறக்காது— இருந்தாலல்லவோ பறப்பதற்கு?— அதுதான் ஆசாமியை 'அவுட்'டாகி விடுகிறானே!

ஆனால் ஒன்று—அந்த 'மோட்ச'த்தை 'மரணம்' எனக் கொள்ளற்க; 'மோட்சம்' என்றே கொள்க!

இத்தகைய திவ்யமான மோட்சத்தை நீங்கள் அடைய வேண்டுமானால் மனிதனுக்கு மனிதன் பக்தி செலுத்துவதை உடனே நிறுத்துங்கள்; அதற்குப் பதிலாக மண்ணிலும் மரத்திலும், கல்லிலும் செம்பிலும் பக்தி செலுத்துங்கள். ஆனால் அந்தப் பக்தி

இந்த லோக வாழ்க்கைக்கு உதவ வேண்டாம்; அந்த லோக வாழ்க்கைக்கே உதவட்டும். ஏனெனில், தருமமும் தெய்வ பக்தியுமே மனித சமுதாயத்திற்கு இன்றியமையாத மூலதனங்கள். ஏற்கெனவே மஞ்சளும் குங்குமமுமாக, திருநீறும் நாமக்கட்டியுமாக இருக்கும் அவற்றை நாம் மேலும் மேலும் போற்றி வளர்க்கவேண்டும். இவை யில்லாததாலேயே உலகில் பல நாடுகள் முன்னேறி யிருக்கலாம்—ஆயினும் அவை காணும் இன்பம் இகலோக இன்பம்; நாம் காண விரும்பும் இன்பமோ பரலோக இன்பம்!

அது பொய்; இது மெய் — 'எது பொய், எது மெய்?' என்று யோசிக்க வேண்டாம்—பக்தியுடன் நம்பு; பசியை 'முக்தி'யால் வெல்வாய்! வல்லவனாக வாழாவிட்டாலும் 'நல்லவ'னாக வாழ்வாய்! ஏய்ப்பாருக்கு ஏவல் செய்து வீழ்வாய்!

